இதின் விலை 1 அணா.

கணபதி துணை



# இராமாயண பாகவத சாரசங்கிரக



பார்வையிடப்பா

கோயமுத்தூர் வித்தியாபாநு அச்சுயந்திரசாலையில்,
பதிப்பிக்கப்பட்டது.

ஸ்ரீ கூ சுப்பிரமணிய ஐயர், B.A.

அவர்களின்

# அன்பளிப்பு

துரைஜில்லா பழனித்தாலூக்கா ஆயிக்குடி ஜமீன் ஸ்தான வித்வ சிரோன்மணியாகிய மகா-ள-ள-ஸ்ரீ ப. பொன்னுசாமிக் கவிராயர் அவர்களால் இயற்றப்பட்ட சாற்றுக்கவிகள்.

---

அறுசீர்க்கழி நெடிலடி.

---

திரமென் றூர்துழாயலங்கலணி மார்பன்சா
பம்வாள்தண்டு
திரவுஞ் சுஞ்சுதரி சனமேந்து மாலிற்கு
கஞ்சுண்டேந்திரன்
திரசுப் பிரமணிய கவீசுரன் செய்
புகல்பாட்டொவ் வொன்றினுக்குச்
த்திரமுங் கையசைக்கு மரப்பாவை
சிரக்கம்பஞ் செய்யுந்தானே

பொருமாலை வாயக்கரும்பி னிரதஞ்செந்
தேன்சீனி புசித்தாலின்பந்
தருமாலை யார்சோலை சூழ்கோய நகர்மீது
தடமாலிஞ்சி
உருமாலை யங்குலவு திருமாலை வாழ்த்தியொரு
மாலைசொற்றான்
கருமாலை யகற்றுமினிச் சுப்ரமண்ய கவிசுரன்பாக்
கணைடென்றாரே

நாரதியம்பொறிக்குநவில் பாச ரதசரிதமது
நவின்றான்க்ரீடி
சாரதியாகிய வேணுகோபாலன் மீதுசதுர்
மறையோர் வாழ்த்தக்
காரதிகம் பொழிவதெனத் தமிழ்மாரிபொழிந்தகவி
சுரனுங்கண்ய
மாரதிமா ரன்சுப்ர மணியகவி திவ்யநா
வலவன்றானே.

மதுரைஜில்லா ஆற்றூர் கிராமம் கந்தாடை
இராமகிருஷ்ணையா குமாரர் இராதாகிருஷ்ணையர்
இயற்றியது

---

## நேரிசையாசிரியப்பா.

எர்வளர் வெள்ளியங் கிரியின் றிழிதரு
மீர்வள ரருவி யெறியு முகத்துச
சங்கொடு பலவள மேந்தி யிருகரையுஞ்
சிந்திச சென்று சில்லென வொலித்துக்
கொண்ட றாஙகு ருண்டலை பலவே
யெணடிசை விரியச செய்து விளஙகும்
நொய்யலெனுங காஞ்சி சூழுங் கொஙகின்
மெய்யிற் சிரமெனத் தானே பொலியுங
கோயந் துலஙகக் கோயில் கொள்ளு
மாயவன் றன்மேற் ஸ்தோத்திரப் பாமாலை
பாகவதப் பத்தாங காந்தக் கருத்தைப்
பாகமோ டமைத்து முப்பான் மூன்று
வாடா மலரான் வகைபெறத் தொடுத்தனன்
ஆறிய மாஙகில மணைவுமக் கற்றுப்
பாரிற் செந்தமிழ் பழுகறப் பயின்று
சீர்த்தி மேவுந் திருவிளை யாடலைக்
கீர்த்தனை யாகவே கோர்த்தியாக் கிளத்திய
பீடார் நஞ்சுணட விப்பிரன் றன்றவக்
காளைக் கவீச்சுரச சுப்ரமண்யன்
வேளைப் பழித்து விளங்கெழி லோனே.

ஸ்ரீ கிருஷ்ண பரப்ரமணேநம:
சென்னை திருவல்லிக்கேணியில் கோயில்கொண்டிருக்கும்
ஸ்ரீ பார்த்தசாரதி பெருமாள்பேரில்,
இராமயண சங்கரகமாலா.

# ஸ்ரீகிருஷ்ண ஸ்தோத்திரம்



1895ம் ௵த்துக்குச்சரியான மன்மத-௵ இயற்றப்பட்டது

## விநாயகர் தோத்திரம்.

நேரிசை வெண்பா.

சீராமன் காதை திருவல்லிக் கேணிநர
நாரா யணன்பேரில் நாநவிலச்—சோரா
மதுரகவி மாரி மகிழவருள் முன்னோன்
பதுமபதம் நன் னெஞ்சே பற்று.

# தோத்திரம்.

## எண்சீர் கழிநெடிலாசிரிய விருத்தம்.

பாற்கடலு மரவணையுந் துறந்த யோத்திப்
　　பானுகுலத் தயரதன்மா மதலை யாகி
நோற்கவரு வேள்வியிற்று டகையைச் செற்று
　　நுவல்சாபந் தகலிகைகல் லுருவ நூறி
மேற்கவினார் நிலைமாட மிதுலைக் கேகி
　　வின்முறித்துச் சனகிமினை விரும்ப வேட்டு
மாற்பெருகு திருவல்லிக் கேணி நின்ற
　　மாயனரன சாரதிதாள் வாழ்த்து நெஞ்சே. 1.

தடுத்துவரு மழுவலான் செருக்க ழித்துத்
　　தம்பியரோ டயோத்திவரத் தந்தை யீந்த
முடிப்பரதற் செய்தசிற் றவ்வை சூழ்ச்சி
　　முடித்தருளி யுடுத்தவற் கலையுங் கொண்டு
வடுத்தடங்கட் சீதையிலக் குவனுஞ் செல்ல
　　வழிக்குகனைத் துணைகொடயற் பரத்து வாசன்
அடுத்தவரை சென்றதிரு வல்லிக் கேணி
　　யர்ச்சுனசா ரதிபதத்தை யகங்கொ ணெஞ்சே 2.

வரைகாட்டிச் சனகியுட னிருப்பத் தந்தை
மாய்வறிந்த பரதனனன் மெழுகாய் வாடி
யுரைகாட்டித் தன்முனைமீண் டழைப்ப னென்றே
வுயர்சித்ர கூடமரு குறக்கண் டங்கே
கரைகாட்டு கங்கைகுடைந் தரசற் கீமக்
கடன்முடித்துப் பாதுகைதந் தனுப்பக் கானம்
விரைகாட்டு வழிகொடிரு வல்லிக் கேணி
விமலனரன் சாரதிதாள் வேண்டு நெஞ்சே.

தண்டகத்துப் புகுதவத்ரி யனுசூ யைக்காய்
தகவேற்று விராதன்விழச் சரபங் கன்னில்
கண்டுசுதிட் டன்றவமுங் கொண்டு கும்பக்
கடுந்தவனை வணங்கிசிலைக் கணைகொண் டேங்கும்
அண்டருய பஞ்சவடி யிருப்பக் காதல்
அலைதரசூர்ப் பனகைவா தாடக் காதுஞ்
செண்டுமுலை மூக்கிளையோ னரியச் சீர்சால்
திருவல்லிக் கேணியர்தாள் சேவி நெஞ்சே

மூக்கறுந்த சூர்ப்பனகை கரனுந் தூட
முச்சிரனும் படைக்கடலை முடித்தி லங்கா
விராக்கத ராவணற்கிரா மனுமி லக்கு
வன்சீதை யெழில்விரிப்ப விடைந்து காமத்

தீக்கொளுத்த மாரீச னைப்பொன் மானாய்ச்
சீதைமுனம் விடுப்பவவ டிருக்கை பற்றற்
காக்கவெணித் தொடர்ந்ததிரு வல்லிக் கேணி
யர்ச்சுனன்றேர்ப் பாகனடிக் காட்கொ ணெஞ்சே

முன்சென்ற வரக்கன்றழாய் மோலி யம்பின்
முடிவுறும்போ தனுசனபெயர் மொழிந்தி றக்க
மன்பொன்ற வருவாக்கனென் றன்னை யேங்க
மைத்துனன்சொன் மறுத்தொலி வழியே போக்கி
பொன்சென்ற வருக்தனிமென் கொடியைத் தேர்மேல்
பொய்த்தவசி பிராவணன்விண் கொண்டு போகத்
தன்சென்ற விதியெனத்தேர் அல்லிக் கேணித்
தனஞ்சயன்சா ரதிபதத்திற் றாழ்வாய் நெஞ்சே

சடாயுவிதி செய்தயோ முகிதன் ஞூசி
தடிந்துகவந் தனுக்கருளிச் சவரி யின்சொற்
படாவழிகிட் கிந்தையனு மான்சுக் ரீவன்
படைத்துணையின் வாலிவிழப் பதவிதந்து
கடாமுவரிக் கடருண்டி யனுமான் சீதைக்
கண்டுது விட்டிலங்கைக் காவ லானை
விடாதுபொரச் சென்றதிரு வல்லிக் கேணி
விஜயசா ரதிபதத்தை வேண்டு நெஞ்சே

வடணற்குச் சரணளித்துத் தசக்கி ரீவன்
விறலறிந்து கடலணைத்துக் குரங்கின் சேனை
யோர்டிலங்கை நகர்வளைத் தங்கதன் றூதோட்டி
யுருமுமிரா வணன்முதனு ருயுத்தத் தாட்டித்
தேடுகும்ப கர்னனுடல் சிரம்வே றுக்கிச்
செருவிலதி காயனிரா வணனைத் தேய்த்துப்
பீடுபெறத் திருவல்லிக் கேணி நின்ற
பேடிசா ரதிமலர்த்தாள் பேணு நெஞ்சே.

திருமகள்சீ தையையங்கீ கரித்துச் சேர்ந்த
தெசரதனு ரருள்வரத்தின் சிறந்து சேது
அரிவைதில கங்காணக் காட்டிப் புட்ப
வரியேறி யயோத்திவரப் பரத்து வாசன்
இருகையிருந் தருகுபர தன்பால் காற்றின்
இளஞ்சுதனை விடுத்தடுத்து எழில்கொண் டோங்குஞ்
சிரசின்முடி தரித்தபிரான் சீதா ராமன்
திருவல்லிக் கேணியர்தாள் சேவி நெஞ்சே

புவிமகட னுதலிலணி திலகம் போன்று
பொலிதருகே ரளமடுத்த கோங்கு நாட்டின்
நவமணிகள் கொழித்திடுமோ காஞ்சி நொய்யல்
நதிக்கரையின் கோயநகர் நாளும் வாழுங்

9

கவுண்டனிய ராசவலா யனரால் ருக்கு
கழறுசத்ய மங்கலப்பேர்ச் சரண ராயந்தோர்
கவிஞர்குலச் சுப்ரமண்யன் பாடல் பத்துங்
கருதவலார் திருவிளங்கக் களித்து வாழ்வார்



ஸ்ரீராமஜெயம்.

கோயமுத்தூர் இராஜவீதியில் கோயில்கொண்டிருக்கும்
ஸ்ரீ வேணுகோபால கிருஷ்ணஸ்வாமியின்பேரில்

## ஸ்ரீமத் பாகவத தசமஸ்கந்த சங்கிரகமாலா.

---

# ஸ்ரீகிருஷ்ண தோத்திரம்



1924-ம் ௵க்குச்சரியான ருத்ரோத்காரி-௵ தை-௴
இயற்றப்பட்டது.

---

கடவுள் வாழ்த்து.

## விநாயகர் தோத்திரம்.

எண்சீர்கழி நெடிலாசிரிய விருத்தம்.

விரிபுவன முழுவதையும் படைத்துக் காத்து
வெறுவெளியாய்த் துடைத்தழித்து மீண்டுஞ் செய்யும்

ஒருமுதலவ னுமுயற்சி திருகா தேத்தும்
உயர்முதல்வ னெவனவனே வுயிர்கள் போற்றுங்
கரிமுகத்தி னோர்கோட்டுப் புழைக்கை நால்வாய்க்
கணபதியங் குசபாசக் கரவே ரம்பன்
பெரியவ னப்பரம்பொருடாள் கருத்துட் கொண்டு
பின்னை கேள்வன்சரிதை பேசி வாழ்வாம்.

## அவையடக்கம்.

### எண்சீர்கழி நெடிலாசிரிய விருத்தம்.

செல்விநக ரருளாள தாச னென்னும்
நிறைமதுர கவிவரத ராஜ னேராய்
சொல்லியமா பாகவதப் புராணந் தன்னிற்
றழாய் மௌலிக் கிருஷ்ணன்செய் தூய வாடல்
புல்லியமென் மொழியாற்றேத் திரமாய்க் கோத்துப்
புலவர்முனம் வனனெதிர்ப் புட்டுள் ளற்போல்
அல்லியுந்தா மரைத்தடத்தி னெழுந்தாற் போனு
வாட்டுகின்றேன் புன்கவியா ராட்டு வீரே.

### ஆக்கியோன் பெயருங்காலமும்.

செப்புசக மாயிரத்தெண் ணூற்று நாற்பான்

சேருமைந்து ருத்திரோத் காரிக் கோயை
விப்பிரரில் சத்தியமங் கலப்பேர்ப் பாத
வேதவிருக் காசுவலா யனசூத் ரத்தின்
மெய்ப்புரையார் கவுண்டன்ய ரிஷிகோத் 'ரத்தின்
விளங்குகவி நஞ்சுண்டன் விரதத் தோன்றல்
சுப்பிரமா மணிக்கவிஞன் கிருஷ்ண னுடல்
சுருக்கியமுப் பதின்மூன்றாய்த் துதிசெய் தானே.

---

## ஸ்ரீகிருஷ்ண தோத்திரம்.

### எண்சீர்கழி நெடிலாசிரிய விருத்தம்.

வடமதுரை தேவகிபால் வசுதே வர்க்கு
மகவாகி யசோதைநந்தன் மகிழப் போந்து
இடமாருங் கோகுலத்தில் வளரக் கஞ்சன்
ஏவியபூ தனைமுலைப்பா லுயிரோ டுண்டு
படமாடு மணித்தொட்டிற் சகடா சூரன்
படிமுடிய வடர்ந்துதைத்த பாதத் தானைக்
குடமாடுங் கோயநகர் கோயில் கொண்ட
கோபால கிருஷ்ணன்சீர் கூறி வாழ்வாம். 1.

கஞ்சன்விடு காலியா சுரன்விண் ணோங்குங்
காற்றாகி மாற்றார்வேர் களைய வந்த
மஞ்சனைவான் மிசையேற்றி மறைப்பத் தீயோன்
மனம்பதறக் களந்திருகி மண்ணின் வீழ்த்தும்
அஞ்சனமா மேனியனைக் கோழி யாய்வந்
தலக்கணித்த வரக்கன்முடி யறுத்த தாமக்
குஞ்சியனைக் கோயநகர் கோயில் கொண்ட
கோபால கிருஷ்ணன்சீர் கூறி வாழ்வாம் 2.

ஆவினிளங் கன்றுகளை யவிழ்த்து விட்டும்
அடித்தணைய வருமாயர் நகைக்கச் செய்துங்
காவிவிழி யார்மனையிற் பாண்டத் தேறுங்
கட்டிததி யிழுதுவெண்ணெய் களவு செய்தும்
பூவுலா கலமேறி யுறிக்க ரீரம்
புடைத்து துளைத் தளைவாயிற் புகட்டி யுண்டும்
கோவியர்முன் சிறாருடனே குடந்தங் கூட்டும்
கோபால கிருஷ்ணன்சீர் கூறி வாழ்வாம். 3.

தாழிததி கடையுமனை தனப்பால் வேண்டத்
தாமதிக்கக் கடமுடைத்து வெண்ணெ யள்ளிக்
கீழுலையு மிற்புலிக்கு மரிக்கு மீந்து
கேதமிழைத் தேபாறிக் கிட்டுந் தாய்கை

வீழாம லோடிதவ ததிபாண் டற்கு
வீட்டையளித் தசோதைகறை விசியத் தானிக்
கோழியடை மரம்வீழ்த்திக் குமர ராக்குங்
கோபால கிருஷ்ணன்சீர் கூறி வாழ்வாம். 4·

பலம்விற்பா டனைநோக்கி விலைக்குக் கொள்ளப்
பழந்தருதி யெனக்கேட்டுப் பழங்களெல்லாம்
கலந்தவிரத தெருவுகுத்து நேய வாயர்
களுக்குதவக் களித்களித்துக் கவின்கொள் காலின்
சிலம்புகலினென்றார்ப்பக் கிண்கிணென்னத்
திருவரைப்பூ ணுடைகுழ லலையச் சுட்டி
குலுங்கவுவ நீதமுணக் குடந்த மாடுங்
கோபால கிருஷ்ணன்சீர் கூறி வாழ்வாம் 5.

துன்னிமித்தங் கோகுலத்தில் மிகவே யாண்டு
தொறுவர்மனை துறந்தியமு னைத்தோ யஞ்சேர்
மன்னிறுத்தும் பொழில்பிருந்தா வனஞ்சேர்ந் துய்ய
வடியும்பால் வண்ணனுமெண் ணுயர் சூழப்
பன்னிரைத்தே னுவும்வற்சம் பாய்ந்து துள்ளப்
பைம்புன்மேய்த் திடுமெண்டர் பார்த்திபன் சேய்க்
கொன்னிறுத்துங் கோயநகர் கோயில் கொண்ட
கோபால கிருஷ்ணன்சீர் றி வாழ்வாம் 6·

மண்டுவெஞ்சக் கஞ்சன்விடு பெகனுங் கன்றை
விளவுதிர வீசிவையம் வீழ மூர்க்கன்
மாண்டுதிரம் வாய்வழியப் பிளந்த டுத்த
மாசுணமா மகாசுரன்வாய் வழியே சென்று
கீண்டெறிந்த கேசவனு மூசு கூலங்
கேளிருடன் வற்சமயன் கிளர்விண் மாற்றக்
கூண்டடையுங் குயில்கூவுங் கோய னூர்வாழ்
கோபால கிருஷ்ணன்சீர் கூறி வாழ்வாம் 7.

தாலவனத் தனந்தனுங்கோ விந்த ரோடு
தனமேய்ப்பத் தகைந்தெழுதே னுகனைச் சாய்த்து
ஆலவன லுமிழுங்கா ளியன்பே ரோரா
யிரஞ்சிரத்தே யுடலழுந்தப் படங்க டோறும்
நீலமுகின் மேனியுட னாடுங் கண்ணன்
நெடுவரைபோ லடர்ந்தபெலம் பனைநீ றாக்கிக்
கோலமிகக் கோயநகர் கோயில் கொண்ட
கோபால கிருஷ்ணன்சீர் கூறி வாழ்வாம். 8.

பெருமழையி னதிகணிறை நீத்த மோடப்
பிறங்குதனு நீராட வெய்தும் பெண்கள்
அரைத்துகிலைக் களவாடிக் குருந்தி லேறி
யரிவையர்க ளேங்கினரா யங்கை கூப்பி

ஒருத்திபின னொருத்திகா மேந்தக் கூறை
யுவந்தளித்துச் சிந்தையுந்தி யும்ப ரேற்றுங்
குருமணியாங் கோவிந்தன் கோய னூர்வாழ்
கோபால கிருஷ்ணன்சீர் கூறி வாழ்வாம். 9.

கோபதியுற் சவந்தடுத்து நந்த னோடு
கோவர்த்த னக்கிரியர்ச் சனைந டாத்த
மாபயோ தரம்பொழியு மழைமேற் கொள்ளா
வகைவரையேந் திப்பசுவின் மந்தை காத்துத்
தூபய மாடுநந்தன் வருணன் பாங்கர்
துன்னகலன் மின்னவவண் டோன்றி மீட்குங்
கூபதியாங் கோவிந்தன் கோய னூர்வாழ்
கோபால கிருஷ்ணன்சீர் கூறி வாழ்வாம். 10.

வேயூது மிசைகேட்டு விலங்கும் புள்ளும்
விருக்கமுமெய் மறந்துநிற்க விரக மேற்றி
வாயூறு மமுதொழுக வாய மாதர்
மயலெழுப்பி யம்பிகா வனத்தி னந்தன்
தீயூதும் பணிவாய்விட் டுயவித் தேசு
தெரிசனற்கு வீடளித்துச் சங்க சூடன்
கூயோல மிடக்கோறிக் கோய னூர்வாழ்
கோபால கிருஷ்ணன்சீர் கூறி வாழ்வாம். 11.

எயிலாடு மிதுலேகும்ப கன்பால் பெற்ற
மேழுமெற்றி நப்பின்னே யிசைய வோட்டு
அயிலாடுங் கஞ்சன்விடு மரிட்டா சூரன்
அடற்கேசி வியோமனுே மரக்கர் கோறி
வெயிலாடும் வில்வேள்விக் கனந்த னந்தன்
விளித்தவக்கு ரூரனுடன் விரைவிற் சென்று
குயிலாடுங் கோயநகர் கோயில் கொண்ட
கோபால கிருஷ்ணன்சீர் கூறி வாழ்வாம் 12.

சம்படங்க டாஙகுதா ருகனேக் கொன்று
தார்புனேயுஞ் சுதாமனுக்குத் தனிவாழ் வீந்து
மூன்பொடுங்குந் திரிவக்கி ரியைநி மிர்த்து
மொய்குழலாக் கிச்சிலேயை முறித்தெ திர்த்த
தும்பிகுவ லேயாபீட மகாபத் தீரன்
துன்முட்டி கன்சாணூ ரன்காய் கஞ்சன்
கொம்பிடர்த்தம் மல்லர்தமை நமனூர் சேர்க்குங்
கோபால கிருஷ்ணன்சீர் கூறி வாழ்வாம் 13.

உக்கிரசே னற்குமுடி கவித்துக் கற்கன்
உதவியகோ ருபநயன மணிந்து நந்தன்
இக்குரைய சோதையுங்கோ குலத்திற் கேக
வியற்றிச்சாந் தீபினிக்க ணிசைநூல் கற்று

தக்கிணைக்காய் மகவழைத்து விடுத்துத் தவனைத்
தணிநந்த னசோதைதுயர் தணிக்கச் செய்து
கொக்கின்மேற் குயில்கூவுங் கோய னூர்வாழ்
கோபால கிருஷ்ணன்சீர் கூறி வாழ்வாம் 14.

குந்திமைந்த ரத்திநக ரிருக்குஞ் செய்தி
குறித்தவக்கு ரூரனறிந் துரைப்பக் கேட்டுத்
தந்தியரண் மதுரைவாழ்ந் திருப்பக் கஞ்சன்
சாவறிந்த சராசந்தன் தனிப்போர் பத்தேழ்
பிந்தியப சயப்பட்டோ டிடவ டித்து
பிறங்குகர வீரகிர காலன்கா லயவன்
தொந்தழற்பஞ் செனமகதன் சேனை கோறுங்
கோபால கிருஷ்ணன்சீர் கூறி வாழ்வாம் 15.

இரேவதியை முசலிமணந் தின்ப மெய்த
விலக்குமியா முருக்குமணிக் கிராக மேற்றிப்
புராதனநா ரதனுற்கைக் கிளைய றிந்து
பூங்கோதை யனுப்பக்குண் டினவூர் போந்து
நரேசசிசு பாலனுருக் குமன்சொற் கேட்டு
நகரிபடை யொடுசூழ நாச்சி யார்தேர்
விராவி னிவர்ந் திடவணைத்துக் கோய னூர்வாழ்
வேணுகோ பாலகன்சீர் விளம்பி வாழ்வாம் 16

உருக்குமன்மா கதன்தந்த வக்கி ரன்சா
லுவன்சேதிச் சிசுபாலன் பவுண்ட ரன்னென்
றிருக்குநரா திபர்வளைப்பச் சக்க ரங்கை
யேந்திப்டைப் பூந்துகளா யிரிய வோட்டி
செருக்குளுருக் குமனை௵தொட் டிரதத் தட்டிற்
சிமிழ்த்துசிகை யைந்துமொரு கூறுஞ் செய்து
குருக்குயி லுருக்குமணிக் துவாரை சேர்க்குங்
கோபால கிருஷ்ணன்சீர் கூறி வாழ்வாம் 17.

விதிவழி யுருக்குமணித் திருவை வேட்டு
வெயில்சமந்த௩கஞ்சூட்டு மெலன்கின் சேயாம்
மதிவதனச் சாம்புவதிச் சதரா சித்து
மகள்சத் தியபாமை காளிந் திப்பெண்
துதிமித்ர விந்தைநாக் கினசித் தென்னுந்
தோகைபத்ரை யிலக்கணையார்த் தொடிக்கை பற்றிக்
குதிகொள்ளுந் துகிர்வாயிற் குழல்வைத் தூதுங்
கோபால கிருஷ்ணன்சீர் கூறி வாழ்வாம் 18.

சோதிடமா புரிநரகா சுரன்பார் மன்னர்
தோற்கவடித் தொருபதினா றாயி ரம்பேர்
மோதுசிறைப் பட்டவரை விடுவித் தன்னார்
மொய்குழலீ ரெண்ணாயி ரம்பேர் வேட்டு

வேதமுனிக் கலகத்தாற் பாரி சாத
 விண்டருவைச சததிதிரு வீட்டி னட்டிக்
கோதகலக் கோயனகர் கோயில் கொண்ட
 கோபால கிருஷ்ணன்சீர கூறி வாழ் பாம் 19.

தங்கைசுபத திரைநரனுந் தபசி பற்றச
 சாந்திசெய்து வசுதேவன் தனிவேள் விப்பின்
நஙகைதே வகியீன்ற வறவர் முனனோ
 நணணவணைத தின்பமுற நயநது காட்டிக்
கஙகைகூ லககணடா கருண னேடு
 கனிட்டனுமோா வீடுபெறக காட்சி தந்து
கொஙகுதிரும் பொஙகாதவழ் கோய னூாவாழ்
 கோபால கிருஷ்ணன்சீா கூறி வாழ்வாம் 20.

அரன்கயிலை யடைந்துவர மேற்றுப் பெற்ற
 வரிவடிவா லெதிாததபவுண டரனுங காசி
நிருபனும்போர்க் களத்தவிய நேமி தூணடி
 நின்றகல வியன்கடலி னெரியச செயது
கிருத்திமமுஞ் சுதககணனை யுகிாகனை டெற்றிக
 கேடிழைதத துவிந்தனையுங கீறிக் கோறிக்
குருகலையுங குளனிறையுங கோய னூாவாழ்
 கோபால கிருஷ்ணன்சீா கூறி வாழ்வாம் 21.

சித்தசனை யெரித்தவழ லாடி சொல்லின்
செவாகி மதனெனுந் திருப்பேர் கொண்டு
தத்தைமொழி யுருப்பிணிமி னகடு தோன்றி
சம்பரனு லம்பரமீன் தனிமோ டோவி
சித்திரவாண் டேறச்சம் பரனைக் கொய்து
திகழிரதித் தேன்மணந்து வயிறு வாய்த்த
கொற்றவனி ருத்தினப்பௌத் திரனைப் பெற்ற
கோபால கிருஷ்ணன்சீர் கூறி வாழ்வாம் 22·

சாலுவதே சத்தங்கி சமண்டி பீகன்
சாதகமும் விசக்கிரனு மிடும்ப னோடு
மூலமற வொழித்தசும்பு கிடந்த வோம்பி
முன்னிருக னுருப்பெறவே மோட்ச மீந்து
வேலின்விழி யுருக்குமியை யனிருத் தற்கு
வேட்பித்துச் சுயோதனன்பெண் ணிலக்க ணைமின்
கோலமிகுஞ் சாம்பனுக்கு மணஞ்செய் விக்குங்
கோபால கிருஷ்ணன்சீர் கூறி வாழ்வாம் 2

வாணன்மக ளுடாங்கனைதன் கனவிற் கண்ட
மதன்சுதன்மேன் மயலாகிக் கலவி வேடபச்
சேணிடைச்சித் திரலேக்கைத் துயிலு மாரன்
திருமகனைக் கொடுபோந்து சேரச் செய்யச்

சோணிதமா புரத்தரக்கர் வாண னான்கு
தோளொழிய வாயிரங்கை துணித்த வாழிக்
கோணல்வளை கதைவாள்கோ தண்ட மேந்துங்
கோபால கிருஷ்ணன்சீர்   றி வர்ழ்வாம் 24.

வீமனுமர்ச் சுனனுடனு மறையோ ரென்ன
வேள்வியடுத் தமர்வேண்ட வெகுண்டு டன்ற
மாமக தனைக்காற்றின் மைந்தன் கொல்ல
மன்னர்சிறை விடுவித்து மகுடஞ் சூட்டி
பூமனுஞ்சே திபச்சிசுபா லனைச்சே தித்துப்
பொருவிலிணைப் பதநிழலிற் பொருந்தச் செய்யுங்
கோமனனைக் கோயநகர் கோயில் கொண்ட
கோபால கிருஷ்ணன்சீர் கூறி வாழ்வாம் 25.

மாயைமிக மதனனுடன் நெடும்போர் செய்த
மறவன்சா லுவனைமுரண் மலைக்கும் போழ்தின்
நேயமுட னழுதரற்றும் பாஞ்சா லிக்கு
நீவிய மக்ஷயம்நீட்டி நிகர்த்த வொன்னான்
தாயதந்தி வக்கிரன்வி தூர தன்தன்
தலைதுணியச் சக்கரம்விட் டொழித்த செல்வக்
கோயநக ரிலகமணிக் கோயில் கொண்ட
கோபால கிருஷ்ணன்சீர் கூறி வாழ்வாம் 26.

அரங்காடுஞ் சூதினுள நாடுஞ் செல்வ
முனைத்துந்தோற் றடவிசென்ற வைவர் பன்னி
மருங்காடு துரோபதையை வனத்திற் றேற்றி
மாஙகனிக்காய் மனமறிந்து மறைதூர் வாசன்
பெருங்காட்டின் வியந்துநயந் தாசி கூறப்
பேருண்டி யூட்டுவித்துப் பீழை மாற்றிக்
குரங்காடு சோலைசெறிக் கோய லூர்வாழ்
கோபால கிருஷ்ணன்சீர் கூறி வாழ்வாம் 27.

காளமுனி கடவியபூ தத்தி னாலுங்
கடுக்குளத்தி னீர்பருகுங் கடுமை யாலும்
வேளையை பாண்டுமைந்தர் விளிந்தி டாமல்
விரைந்தோம்பி விராடநகர் வெளிவந் தோங்கப்
பாளைகயல் குதித்தாடும் பணைசூ ழத்திப்
பதிநாது பாண்டவர்க்காய்ப் பரிந்து சென்று
கோளறமெய்த் துணையானான் கோய லூர்வாழ்
கோபால கிருஷ்ணன்சீர் கூறி வாழ்வாம் 28

தூதேகி விதுரன்மனை விருந்தேற் றுற்ற
சுயோதனனை நாடிரந்து மறுப்ப வன்னான்
சூதான வாதனத்தை மிதிப்பக் காக்குஞ்
சூரரும்வீ ரருமாளச் சுழன்று தேய்த்து

வேதாதி விப்பிரன்சேய் விலகச் செய்து
வெயின்முளை குண்டலம்வாங்கி விதித்த தாய்க்குக்
கோதாறப் பிறப்புரைத்தைங் குமரர் சேருங்
கோபால கிருஷ்ணன்சீர் கூறி வாழ்வாம் 29.

களப்பலிநாட் பின்னாக்கிக் காண்டீ பர்க்குக்
கலக்கமறக் கீதைசொலிக் காங்கே யன்முன்
வளையெடுத்து பகதத்தன் பகழி தாங்கி
வலாரிகு னுவையபிமன் மாளக் காத்து
தளம்பரம னாய்க்காட்டிக் கன்ன னாகச்
சாயகம்பார்த் தனைவதையாத் தட்டைத் தாழ்த்திக்
குளம்பொலிய வளமலியுங் கோய னூர்வாழ்
கோபால கிருஷ்ணன்சீர் கூறிவாழ்வாம் 30

சூரன்சே யாவிவிடு முன்னே வண்மைச்
சுக்ரதத்தை யிரந்தேற்றுச் சுயோத னனை தன்
ஊரியா மனனிலையை வீமற் கோதி
உத்திரைநற் கருப்பரிக்ஷித் துயிரைக் காத்துப்
பாரந்தீர்த் துத்தருமற் கரசு சூட்டிப்
பதிமிதுலை வெகுலாசு வன்றே வற்கும்
கோரமிலாப் பதவிதந்து கோய னூர்வாழ்
கோபால கிருஷ்ணன்சீர் கூறி வாழ்வாம் 31.

மிடியேறு மனையேவக் குசல வர்க்கு
விபவமுற வாழ்வளித்து வெள்ளி யாற்ற
முடியேறு மகவிழந்த வைதீ கன்சேய்
முராரிபதங் கிரீடியுடன் மூழ்கி யீந்து
குடியேறும் யதுகுலத்தை முனிவா சாபங்
கொயவிடுத் துத்தவாக்குத் தத்வங் கூறிக்
கொடியேறு மதின்மீறுங் கோய லூர்வாழ்
கோபால கிருஷ்ணன்சீர் கூறி வாழ்வாம் 32.

த்தவனைப் பதரிகா சிரமஞ் சேர்ப்பித்
துயர்முசலி யுடனெதுக்க ளும்ப ரேறத்
த்தையெனக் கிராதனெய்த சரத்தங் குடடங்
கைப்பத்தா ருகர்க்கருளி வைகுண் டஞ்சேர்
மத்தர்மூக லானபரம் பொருளாங் கண்ணன்
முராரியரி யச்சுதன்மா தவன்கோ விந்தன்
காத்தலர்தேர் முருகுயிர்க்குங் கோய லூர்வாழ்
கோபால கிருஷ்ணன்சீர் கூறி வாழ்வாம் 33.

---

# வாழி—சந்தவிருத்தம்.

னை மாய்க்கமட மொறுழி கேசரி
விறறகுறட் பாசு ராமனெய்
வெய்ய வன்குல விராமனெய்ப் பொருவர்
மெசசு கிருஷ்ணபல ராமனெய்
ஆன கற்கியென வவதரித் துலகர்
அல்ல றீர்க்கவரு மாழியான்
அரிய காதைசொலு வார்கள் கீறிபிற
ரறிய வோதியுரை யறைகுவார்
மாணி லம்புகழு மன்ன ராகிதிரு
மக்க ளொக்கன்மிக வாழிய
வாழ்க வென்றுமறை வாழ்க வென்றுமறை
மாத மும்முறை வழங்கவாண்
பாணி ரைப்பெருக சுப்ரமண்ய கவி
பாடல் பாடுமவர் வாழ்கநீள்
பணைபர் வாழ்கதுதி பாடல் வாழியரி
பதும பாதநிழல் வாழியே.

முற்றிற்று.

Printed at the Literary Sun Press, Coimbatore.

20

ஓம் சரஹணப

குகமயம்,

# கந்தர் சஷ்டி கவசம்.




ரத்தினம் பிரஸ் (பிராஞ்ச்)

65, திருப்பள்ளி தெரு, மதராஸ் [illegible]டவு

விலை] 1952

ஓம்

குகமயம்.



# கந்தர் சஷ்டி கவசம்.

காப்பு.

நேரிசை வெண்பா.

துதிப்போர்க்கு வல்வினைபோந் துன்பம்போ நெஞ்சிற்
பதிப்போர்க்குச் செல்வம் பலித்துக் கதித்தோங்கும்
நிஷ்டையுங்கை கூடு நிமலரருள் கந்தர்
சஷ்டி கவசந் தனை.

குறள் வெண்பா.

அமரரிடர் தீர வமரம் புரிந்த
குமரனடி நெஞ்சே குறி

நூல்

நிலைமண்டில ஆசிரியப்பா.

சஷ்டியை நோக்கச் சரவண பவனார்
சிஷ்டருக் குதவுஞ்செங்கதிர் வேலோன்

பாத மிரண்டில் பன்மணிச் சதங்கை
கீதம் பாடக் கிண்கிணியாட
மைய நடஞ்செய்யும் மயில்வா கனனார்
கையில்வே லாலெனைக் காக்கவென் றுவந்து
வரவர வேலா யுதனார் வருக
வருக வருக மயிலோன் வருக
இந்திரன் முதலா வெண்டிசை போற்ற
மந்திர வடிவேல் வருக வருக
வாசவன் மருகா வருக வருக
நேசக் குறமகள் நினைவோன் வருக
ஆறுமுகம் படைத்த ஐயா வருக
நீறிடும் வேலவன் நித்தம் வருக
சிரகிரி வேலவன் சீக்கிரம் வருக
சரஹண பவனார் சடுதியில் வருக
ரஹண பவச ரரரர ரரர
ரிஹண பவச ரிரிரிரி ரிரிரி
விணபவ சரஹ வீரா நமோநம
நிபவ சரஹண நிறநிற நிறென
வசர ஹணபவ வருக வருக
அசுரர் குடிகெடுத்த ஐயா வருக
என்னை யாளு மிளையோன் கையில்
பன்னிரண் டாயுதம் பாசாங்குசமும்
பரந்த விழிகள் பன்னிரண் டிலங்க
விரைந்தெனைக் காக்க வேலோன் வருக

ஐயுங் கிலியும் அடைவுடன் சௌவும்
உய்யொளி சௌவும் உயிரையும் கிலியும்
கிலியுஞ் சௌவும் கிளரொளி யையும்
நிலைபெற் றென்முன் நித்தமு மொளிரும்
சண்முகன் றீயும தனியொளி யொவ்வும்
குண்டலி யாஞ்சிவ குகன்றினம் வருக
ஆறு முகமும் அணிமுடி யாறும்
நீறிடு நெற்றியும் நீண்ட புருவமும்
பன்னிரு கண்ணும் பவளச் செவ்வாயும்
நன்னெறி நெற்றியில் நவமணிச் சுட்டியும்
ஈராறு செவியில் இலகு குண்டலமும்
ஆறிரு திண்புயத் தழகிய மார்பில்
பல்பூ ஷணமும் பதக்கமுந் தரித்து
நன்மணி பூண்ட நவரத்ன மாலையும்
முப்புரி நூலும் முத்தணி மார்பும்
செப்பழ குடைய திருவயி றுந்தியும்
துவண்ட மருங்கில் சுடரொளிப் பட்டும்
நவரத்னம் பதித்த நற்சீ ராவும்
இருதொடை யழகும் இணைமுழந் தாளும்
திருவடி யதனில் சிலம்பொலி முழங்க
செககண செககண செககண செகண
மொகமொக மொகமொக மொகமொக மொகெண
நகநக நகநக நகநக நகென
டிகுகுண டிகுடிகு டிகுகுண டிகுண

டகுடகு டிகுடிகு டங்கு டிங்குரு
விந்து விந்து மயிலோன் விந்து
முந்து முந்து முறுகவேண் முந்து
எந்தனை யாளும் ஏரகச் செல்வ
மைந்தன் வேண்டும் வரமகிழ்ந் துதவும்
லாலா லாலா லாலா வேசமும்
லீலா லீலா லீலா விநோதனென்
றுன்றிரு வடியை உறுதியென் றெண்ணும்
என்றலை வைத்துன் இணையடி காக்க
என்னுயிர்க் குயிராம் இறைவன் காக்க
பன்னிரு விழியால் பாலனைக் காக்க
அடியேன் வதனம் அழகுவேல் காக்க
பொடிபுனை நெற்றியை புனிதவேல் காக்க
கதிர்வே லிரண்டு கண்ணினைக் காக்க
விதிசெவி யிரண்டும் வேலவர் காக்க
நாசிக ளிரண்டும் நல்வேல் காக்க
பேசிய வாய்தனைப் பெருவேல் காக்க
முப்பத் திருபல் முனைவேல் காக்க
செப்பிய நாவைச் செவ்வேல் காக்க
கன்ன மிரண்டும் கதிர்வேல் காக்க
என்னிளங் கழுத்தை இனியவேல் காக்க

மார்பை யிரத்ந வடிவேல் காக்க
சேரிள முலைமார் திருவேல் காக்க
வடிவே லிருதோள் வளம்பெறக் காக்க
பிடரிக ளிரண்டும் பெருவேல் காக்க
பழுபதி னாறும் பருவேல் காக்க
வெற்றிவேல் வயிற்றை விளங்கவேல் காக்க
சிற்றிடை யழகுறச் செவ்வேல் காக்க
நாணாங் கயிற்றை நல்வேல் காக்க
ஆண்குறி யிரண்டும் அயில்வேல் காக்க
பிட்டம் மிரண்டும் பெருவேல் காக்க
வட்டக் குதத்தை வல்வேல் காக்க
பணைத்தொடை யிரண்டும் பருவேல் காக்க
கணைக்கால் முழந்தாள் கதிர்வேல் காக்க
ஐவிர லடியிணை அருள்வேல் காக்க
கைக ளிரண்டும் கருணைவேல் காக்க
முன்கை யிரண்டும் முரண்வேல் காக்க
பின்கை யிரண்டும் பின்னவ ளிருக்க
நாவில் சரஸ்வதி நற்றுணை யாக
நாபிக் கமலம் நல்வேல் காக்க
முப்பா னாடியை முனைவேல் காக்க
எப்பொழு தும்மெனை எதிர்வேல் காக்க
அடியேன் வசனம் அசைவுள நேரம்
கடுகவே வந்து கனகவேல் காக்க
வரும்பக றன்னில் வச்சிரவேல் காக்க

அரையிரு டன்னில் அனையவேல் காக்க
ஏமத்திற் சாமத்தில் எதிர்வேல் காக்க
தாமத நீங்கிச் சதுர்வேல் காக்க
காக்க காக்க கனகவேல் காக்க
நோக்க நோக்க நொடியி னோக்க
தாக்க தாக்க தடையறத் தாக்க
பார்க்க பார்க்க பாவம் பொடிபட
பில்லி சூனியம் பெரும்பகை யகல
வல்ல பூதம் வலாஷ்டிகப் பேய்கள்
அல்லற் படுத்தும் அடங்கா முனியும்
பிள்ளைக டின்னும் புழைக்கடை முனியும்
கொள்ளிவாய்ப் பேய்களும் குறளைப் பேய்களும்
பெண்களைத் தொடரும் பிரம்மரா க்ஷதரும்
அடியனைக் கண்டால் அலறிக் கலங்கிட
இரிசி காட்டேரி இத்துன்ப சேனையும்
எல்லினு மிருட்டிலும் எதிர்படு மண்ணரும்
கனபூசை கொள்ளும் காளியோ டனைவரும்
விட்டாங் காரரும் மிகுபல பேய்களும்
தண்டியக் காரரும் சண்டா ளர்களும்
என்பெயர் சொலவும் இடிவிழுந் தோடிட
ஆனை யடியினில் அரும்பா வைகளும்
பூனை மயிரும் பிள்ளைக ளென்பு
நகமு மயிரும் நீண்முடி மண்டையும்
பாவைக ளுடனே பலகல சத்துடன்

மணயிற் புதைத்த வஞ்சனை தனையும்
ஒட்டியச் செருக்கும் ஒட்டியப் பாவையும்
காசும் பணமும் காவுடன் சோறும்
ஓதுமஞ் சனமும் ஒருவழிப் போக்கும்
அடியனைக் கண்டால் அலைந்து குலைந்திட
மாற்றான் வஞ்சகர் வந்து வணங்கிட
காலதூ தாளெனைக் கண்டாற் கலங்கிட
அஞ்சி நடுங்கிட அரண்டு புரண்டிட
வாய்விட் டலறி மதிக்கெட் டோட
படியினின் முட்டப் பாசக் கயிற்றால்
கட்டுட னங்கம் கதறிடக் கட்டு
கட்டி யுருட்டுக் கால்கை முறிய
கட்டு கட்டு கதறிடக் கட்டு
முட்டு முட்டு முழிகள் பிதுங்கிட
செக்கு செக்கு செதிற்செதி லாக
சொக்கு சொக்கு சூர்ப்பகைச் சொக்கு
குத்து குத்து கூர்வடி வேலால்
பற்று பற்று பகலவன் றணலெரி
தணலெரி தணலெரி தணலது வாக
விடுவிடு வேலை வெருண்டது வோட
புலியு நரியு புன்னரி நாயும்
எலியுங் கரடியும் இனித்தொடர்ந் தோடத்
தேளும் பாம்பும் செய்யான் பூரான்
கடிவிட விஷங்கள் கடித்து யரங்கம்

ஏறிய விஷங்கள் எளிதுட னிறங்க
ஒளிப்புஞ் சுளுக்கும் ஒருதலை நோயும்
வாதஞ் சயித்தியம் வலிப்புப் பித்தம்
சூலைசயங் குன்மம் சொக்குச் சிரங்கு
குடைச்சல் சிலந்தி குடல்விப் பிரிதி
பக்கப் பிளவை படர்தொடை வாழை
கடுவன் படுவன் கைத்தாள் சிலந்தி
பற்குத் தரணை பருவரை யாப்பும்
எல்லாப் பிணியும் என்றனைக் கண்டால்
நில்லா தோட நீயெனக் கருள்வாய்
ஈரே ழுலகமும் எனக்குற வாக
ஆணும் பெண்ணும் அனைவரும் மெனக்கா
மண்ணா ளரசரும் மகிழ்ந்துற வாகவும்
உன்னைத் துதிக்க உன்றிரு நாமம்
சரஹண பவனே சைலொளி பவனே
திரிபுர பவனே திகழொளி பவனே
பரிபுர பவனே பவமொளி பவனே
அரிதிரு மருகா அமரா பதியைக்
காத்துத் தேவர்கள் கடுஞ்சிறை விடுத்தாய்
கந்தா குகனே கதிர்வே லவனே
கார்த்திகை மைந்தா கடம்பா கடம்பனை
இடும்பனை யழித்த இனியவேல் முருகா
தணிகா சலனே சங்கரன் புதல்வா
கதிர்கா மத்துறை கதிர்வேல் முருகா

பழநிப் பதிவாழ் பால குமாரா
ஆவினன் குடிவாழ் அழகிய வேலா
செந்தின்மா மலையுறும் செங்கல்வ ராயா
சமரா புரிவாழ் சண்முகத் தரசே
காரார் குழலாள் கலைமக ணன்றாய்
என்னா விருக்க யானுனைப் பாட
எனைத்தொடர்ந் திருக்கும் எந்தை முருகனைப்
பாடினே னாடினேன் பரவசமாக
ஆடினே னாடினேன் ஆவினன் பூதியை
நேச முடன்யான் நெற்றியி லணியப்
பாச வினைகள் பறந்து நீங்கி
ன்பதம் பெறவே உன்னரு ளாக
அன்புட னிரக்ஷி அன்னமுஞ் சொன்னமும்
மெத்தமெத் தாக வேலா யுதனார்
சித்திபெற் றடியேன் சிறப்புடன் வாழ்க
வாழ்க வாழ்க மயிலோன் வாழ்க
வாழ்க வாழ்க வடிவேல் வாழ்க
வாழ்க வாழ்க மலைக்குரு வாழ்க
வாழ்க வாழ்க மலைக்குற மகளுடன்
வாழ்க வாழ்க வாரணத் துவசம்
வாழ்க வாழ்கவென் வறுமை ணங்க
எத்தனை குறைகள் எத்தனை பிழைகள்
எத்தனை யடியேன் எத்தனை செய்தால்
பெற்றவ னீகுரு பொறுப்ப துன் கடன்

பெற்றவள் குறமகள் பெற்றவ ளாமே
பிள்ளையென் றன்பாய் பிரிய மளித்து
மைந்தனென் மதுன் மனமகிழ்ந் தருளித்
தஞ்சமென் றடியார் தழைத்திட வருள்செய்
கந்தர் சஷ்டி கவசம் விரும்பிய
பாலன் றேவ ராயன் பகர்ந்ததைக்
காலையில் மாலையில் கருத்துட னாளும்
ஆசா ரத்துடன் அங்கந் துலங்கி
நேசமுடனொரு நினைவது வாகிக்
கந்தர் சஷ்டி கவச மிதனைச்
சிந்தை கலங்காது தியானிப் பவர்கள்
ஒருநாள் முப்பத தாறுருக் கொண்டு
ஓதியே செபித்து உகந்து ந றணிய
அஷ்டதிக் குள்ளோர் அடங்கலும் வாசமாய்த்
திசைமன்ன ரெண்மர் செயல தருளுவர்
மாற்றல ரெல்லாம் வந்து வணங்குவர்
நவகோள் மகிழ்ந்து நன்மை யளித்திடும்
நவமத னெனவும் நல்லெழில் பெறுவர்
எந்த நாளுமீ ரெட்டா வாழ்வார்
கந்தர் வேலாங் கவசத் தடியை
வழியாய்க் காண மெய்யாய் விளங்கும்
விழியாற் காண வெரிண்டிடும் பேய்கள்
பொல்லா தவரைப் பொடிபொடி யாக்கும்
நல்லோர் நினைவில் நடனம் புரியும்

சர்வ சத்துரு சங்கா ரத்தடி
அறிந்தென துள்ளம் அஷ்டலட் சுமிகளில்
வீரலட் சுமிக்கு விருந்துண வாகச்
சூரபத் மாவைத் துணித்தகை யதனால்
இருபத் தேழ்வர்க் குவந்தமு தளித்த
குருபரன் பழநிக் குன்றினி லிருக்கும்
சின்னக் குழந்தை சேவடி போற்றி
என்னைத்தடுத் தாட்கொள என்றன துள்ளம்
மேவிய வடிவுறும் வேலவ போற்றி
தேவர்கள் சேனா பதியே போற்றி
குறமகள் மனமகிழ் கோவே போற்றி
திறமிகு திவ்விய தேகா போற்றி
இடும்பா யுதனே இடும்பா போற்றி
கடம்பா போற்றி கந்தா போற்றி
வெட்சி புனையும் வேளே போற்றி
உயர்கிரி கனக சபைக்கோ ரரசே
மயிலநட மிடுவோய் மலரடி சரணம்
சரணஞ் சரணஞ் சரஹண பவஓம்
சரணஞ் சரணஞ் சண்முகா சரணம்.

கந்தர் சஷ்டி கவசம் முற்றிற்று.

---

உ

அருட்பெருஞ்ஜோதி

# சிதம்பரம்-இராமலிங்க சுவாமிகள்

அருளிச் செய்த

# திரு அருட்பா.

## பிரார்த்தனை மாலை

சீர்கொண்ட தெய்வ வதனங்க ளாறுந் திகழ்
கடப்பந், தார்கொண்ட பன்னிரு தோள்களுந்
தாமரைத் தாள்களுமோர், கூர்கொண்ட வேலு
மயிலு நற்கோழிக்கொடியு மருட், கார்கொண்ட
வண்மைத் தணிகாசலமுமென் கண்ணுற்றதே. 1

கண் மூன் றுறுசெங் கரும்பின்முத்தே பதங்
கண்டிடுவான், மண்மூன் றுலகும் வழுத்தும்
பவளமணிக்குன்றமே, திண்மூன்று நான்கு புயங்
கொண்டொளிர்வச்சிர மணியே, வண்மூன்றலர்
மலைவாழ் மயிலேறிய மாணிக்கமே. 2

வாணித்த ஞான மருந்தேயென் கண்ணி
னுண் மாமணியே, ஆணிப்பொன்னே யென தாரு
யிரே தணிகாசலனே, தாணிற்கிலே னினைத்

தாழாத வஞ்சர்தமதிடம் போய்ப், பேணித்திரிந்தன னந்தோ என் செய்வனிப் பேதையனே. 3

அன்னே யெனைத்தந்த யப்பா வென்றேங்கி யலறுகின்றேன், என்னேயிவ்வேழைக் கிரங்காது நீட்டித்திருத்த லெந்தாய், பொன்னே சுகுணப் பொருப்பே தணிகைப் பொருப்பமர்ந்த, மன்னே கலப மயின்மே லழகிய மா மணியே. 4

மணியே நினைப்புன வல்லியை வேண்டி வளர் மறைவான், கணியே யென்னின்ற கண்ணே யென்னுள்ளக் களிநறவே, நணியே தணிகைக்கு வாவென வோர் மொழி நல்குவையே. 5

நல்காத ஈனர்தம் பாற்சென் றிரந்து நவைப் படுதன், மல்காத வண்ணமருள்செய் கண்டாய் மயில் வாகனனே, பல்காதல் நீக்கிய நல்லோர்க் கருளும் பரஞ்சுடரே, அல்காத வண்மைத் தணிகாசலத்தி லமர்ந்தவனே. 6

அமரா வதியிறைக் காருயிரீந்த வருட்குன்
றமே சமராபுரிக்கரசே தணி காசலத் தற்பரனே,
குமரா பரம குருவே குகாவெனக் கூவி நிற்பேன்,
எமராஜன் வந்திடுங்கா லையனே யெனையேன்று
கொள்ளே. 7

திரு அருட்பிரகாச வள்ளலார் சித்திவளாகத்தில்
திருக்காப்பிட்டுக்கொண்ட காலத்தில்

அருளிய திருப்பாடல்

பிச்சுலகர் மெச்சப் பிதற்றிநின்ற பேதையனேன்
இச்சையெல்லாம் எய்த இசைந்தருளிச்செய்தனையே
அச்சமெல்லாந் தீர்ந்தேன் அருளமுதம் உண்கின்றேன்
இச்சலும்பே ரானந்த நித்திரைச்செய் கின்றேனே.

திருச்சிற்றம்பலம்.



மகாமகோபாத்யாய, டாக்டர்
உ. வே. சாமிநாதையர் நூல் நிலையம்

# அறிவிப்பு

இதனால் சகலமானவர்களுக்கு தெரிவிப்பது யாதெனில்: எங்களிட சில்லரை புத்தகங்களும், அம்மாசீ தினுசுகளும் விலை சரசமாய் கிடைக்கு

தமிழ், இந்தி, தெலுங்கு, இங்கிலீஷ சமஸ்கிருதம், மலையாளம், கன்னட முதலிய பாஷைகளில் அச்சு வேலைச செய்து தரப்படும்.

தமிழ், இங்கிலீஷ், போஸ்டர் வே களும் செய்து தரப்படும் என்று தெ வித்துக்கொள்ளுகிறோம்.

ரத்தினம் பிரஸ் (பிரான்ச்

திருப்பள்ளி தெரு, சென்னை

சிவமயம்

சென்னை, திருவேட்டீசுவரன்பேட்டை

திருக்கோயிலின்கணெழுந்தருளியிருக்கும்

# ஸ்ரீ ஆறுமுகசுவாமி

# தோத்திரம்



இது பார்காவடி

**அண்ணாமலை பரதேசியவர்கள்**

வேண்டுகோளால்,

சென்னை, ஆறுகாடு, குயப்பேட்டை

தமிழ்ப்புலவர்

**நெல்லை-அப்பாசாமி உடையாரவர்கள்**

இயற்றியது.

மறு பதிப்பு 1971

முதற் பதிப்பு—1910

இதன் விற்பனைத் தொகை திருவேட்டீசுவரர் ஆலயத் திருப்பணி நிதிக்கு அளிக்கப்பெறும்.

சித்திரா பௌர்ணமி
1971

விலை : 10 காசு

கபீர் அச்சகம், சென்னை–5

# சிறப்புக்கவி

ஸ்ரீமத்-வித்வான்

## ம. இராஜகோபாலப் பிள்ளையவர்கள்

*இயற்றிய*

**நேரிசைவெண்பா**

திருப்பேற்றை நாடியொரு தோத்திர நூற் செய்தான்
விருப்பேற்று நல்லதிரு வேட்டீச் சுரப்பேட்டை
ஆறுமுக மாநிமலற் கப்பாசா மிப்புலவ
ரேறுமுக மாநெல்லி யான்.



ஸ்ரீமத்-வித்வான்

## ஆ. மே. சென்னகேசவலு நாயுடவர்கள்

*இயற்றிய*

**அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்**

திருத்தமுறச் சேதனர்க டிருவேட்டீச் சுரப்
பேட்டை சேர்ந்து மிக்கோர், நிருத்தமுற வாழாறு
முகநிமல னெடுங்கழற்கே நிகரின்றெல்லாப்,
பொருத்தமுறத் தோத்திரமா நூலொன்று புரிந்தீந்
தான் புலவரேறு, மொருத்தனுறு வளநெல்லி
யப்பாசா மிப்பெயர்கொ ளுடையான் மாதோ.



உ



சிவமயம்

வேலுமயிலுந்துணை

## திருவேட்டீசுவரன்பேட்டை
## திருக்கோயிலின்கணெழுந்தருளியிருக்கும்

# ஆறுமுகசுவாமி தோத்திரம்



### காப்பு வெண்பா

ஏறுமுகந் தேறு மெழிறிருவேட் டீச்சுரம்வா
ழாறுமுகன் பாதத் தணிபாவான்—மாறிலக
நேசமுறப் போற்றவில்வ நீழலமர் வல்லபக
ணேசநின்றுட் கூட்ட நினைப்பு.

## நூல

### பதினுன்குசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

சீராரு மணிமகுட நிறைசிரம் பொன்னுடை
திருநீற்று நுதலி னுசி
சேர்கருணை யீராறு விழிகுண்ட லச்செவி
சிவசிவா வென்புன் னகைவாக்
கேராறு முகமணிக் கந்தர்நவ ரத்னுர
விழைமுந்நூன் மார்ப மீரா
றெறிகொடிச் சேவலா திப்படைச்செவ் வேலேந்து
மினைவலையங் கடக நீபத்
தாராறு திண்ணியதோ ளால்வயிறு கோசிகந்
தரியிடை சதங்கை கொஞ்சுஞ்
சலசதிரு வடியசுர தந்திகுற மாதுபயஞ்
சாருநவ வீரர் சூழச்
சூராறு நடனமயின் மீதுவந் தருளுவாய்
தொல்திருவேட் டீச்சுர மமர்
சுரவாறு முகநாம மறையாறு சுகசேம
துரையாறு முக சுவாமியே. (1)

மதியாத வன்கனற் கட்சோதி யமரர்துயர்
மாற்றவரு ணுதல் விழிதர
வருமறு பொறிச்சுடர்க் காய்ந்துல கெலாந்தொழவு
மாதேவ ரருடீ வளி

மதியாத வக்கங்கை தனிலிடவு மப்புனன்
மச்சமுறை புற் பொய்கையின்
மான்முன்வரர் காப்பவெழு செங்கிரணம் வீசாறு
மகவையறு மீன் வளர்ப்ப
வுதியாத வன்னந்தி மீதுமா தேவனே
டுவந்தொன் றதாவ ணைப்ப
வோராறு கமலமுக மீராறு செங்கரத்
தொருரூப முற வழைக்குந்
துதியாத வாசரவ ணபவகாங் கேயவருள்
தொல்சண்ப காடவி யமர்
சுரவாறு மகநாம மறையாறு சுகசேம
துரையாறு முக சுவாமியே. (2)

பதிநுதற் றீக்கஞ்சி யோடம்மை நூபுரம்
பட்டுதிரு மொன்பான் மணிப்
பாவையர்க ளீன்றநவ வீரர்லக் கங்குமரர்
பரவப்பொன் மேரு விற்போ
யதிவிதம தாவதிர வாடவட ரூழியென
வசுரர்க் கொளிக்கு மிந்திர
ஞதிசிதி சாபால ரார்த்துத்தம் படைவீசு
மவரவர்க் கத்திர மேவி
கொதியதட் டறசெருப் படிவீழ மகதிமுன்
கூறவருள் கூர்ந் தெழுப்பிக்

கொண்டசரு வஞ்ஞமெய்ச் சித்ரூபங் காட்டியருள்
குமரகுரு பரவன்பர் சொற்
றுதியுறவு சுப்பிரமண் ணியவெளிய சொற்குமருள்
தூயசந் தனவனம் வாழ்
சுரவாறு மகநாம மறையாறு சுகசேம
துரையாறு முக சுவாமியே.

வன்னமலி பைந்துழா யையாயு தங்கடிரு
மறுமணவே யார மணிபால்
வாரிபீ தாம்பர வநந்தசா யியினுந்தி
மலரின்வரு புவன சிட்டி
யன்னமலி வெண்சலச மனைமறைச் செல்விநா
வமரர்ஞான வந்த ணமக
னறியாமை யாற்கலுழ்ந் தெண்கணிலு நீர்வார
வணிமுடித் தலைக் குட்டிவண்
மன்னுமலி சிறையிட்டவ் விதிசெய்து வேதமுறை
வாக்கியற் றுதை செவியின்
மனமகிழ்ந் துள்ளுளெழு மோகையா நந்தவுரை
மந்தணவின் மழலை மொழியாற்
சொன்னவோ மடசரச் சுகசொரூப மடியற்குஞ்
சொல்வையே திருப்புரம் வாழ்
சுரவாறு மகநாம மறையாறு சுகசேம
துரையாறு முக சுவாமியே. (4)

விந்தகிரி வாதாவி வில்வலனுட நகுடன்
வீழ்த்திமாற் சிவ மாக்கியே
விரைகமண் டலநீர்க் கவிழ்த்தகா ரண்டவுரு
விக்னரா சர்ப்ப ணிந்த
சந்தமலி வந்துகமழ் விரியுவரி யாசமன
சர்வகலை ஞான கற்புத்
தனவுலோ பாமுத்திரை மனைவாழ்க்கை மகிழ்முனிவர்
தலைவன்மலை யத்து வசன்
சிந்தையிரு ளறநுமடி பணியவீ ராறியற்
றிருந்துசிவ தரு மோத்திரஞ்
செவிகுளிர வோதுசிவ சுப்பிரமண் ணியதேவ
தேசிகோத் தம சண்முக
சுந்தரவுமை குமரமான் மருகமுரு காவருள்
தொன்மைசண் பகவனம் வாழ்
சுரவாறு மகநாம மறையாறு சுகசேம
துரையாறு முக சுவாமியே. (5)

மன்னுந்தொல் காப்பியத் தமிழ்மறை தெளிந்துமதின்
மதிதடவு மாட நீடி
வாழ்மதுரை மீனாட்சி சுந்தரே சர்ப்பனுவன்
மகிழ்சடைச் சங்க மமர்நா
டன்னுளொரு நெறிவெற்றி வில்லெறுழி வனசரர்த்
தலைவனைச் சூழ்ந்தெ னதுபேர்

சாற்றுமுட் டையெனப் போன்போலு மென்றேதத்
தாழ்த்திதான் விழுந்த துளியென்
றுன்னும் மகப்பொருளின் வன்மைபொய் யாவென
வோதிதவ முணர்விஞ் ஞான
வுருவி னருளாளேக்கி வேலாயு தாதேசி
கோத்தம வெனப்ப ணிந்த
துன்னுமதி புலமைபொய் யாமொழிக் கருள்காட்சி
தோன்றுமே சந்தன வனம்வாழ்
சுரவாறு மகநாம மறையாறு சுகசேம
துரையாறு முக சுவாமியே. (6)

செந்நிறப பொறியகச் சிறைமொய்தா திகழ்நெக்க
சிதறிரு ளுடைவ சொரிபைந்
தேறலுண் களிதோமி லின்னிசைப் பணமழலை
தேருஞ்சா தாரி பாடற்
றந்நிறந்தெளி யாதெவ் வெவருஞ்சுர மயமாகத்
தாவி மூவுலகுங் கமழ்
தண்சுகந் தத்தொடையன் மூசும்வல் லிசைப்புள்ளெதிர்
தரவழியு மகதி சூட்டி
யெந்நிறந் தெளிகைலை வேதகண்டன் செவியி
லிசைமதுபெய் புண்ணிய மேலா
யிடரூழி யுருவெடுத் தென்னவெவை யும்மடர்த்
தெதிரவுணர் முனி நாரதன்

துந்நிற மகத்துதிவெந் தகரேறி வருகாட்சி
தொழுவனே திருப்புரம் வாழ்
சுரவாறு மகநாம மறையாறு சுகசேம
துரையாறு முக சுவாமியே. (7)

துற்றுபொழி லிமயத் தடஞ்சாரறுரு வுமொரு
துருமத் தடாகத் திடை
தொல்லால வாய்க்கடைச் சங்கத்தி லாதியுரை
தொடர்கபிலே லெழுவர்த் தலை
பெற்ற நக்கீரர்சிவ சிந்தைகவர் விரகினுற்
பெரிது வந்தெடுத் தாயிரம்
பேராக்கி நியதியினி னீர்த்துறைச் செலநின்ற
பேரிடர் படுத்தவு முணர்
வுற்றுமுரு காற்றுப்படை யன்பி ஞேதிடவு
மொளிருசுடர் வடிவேல் விடுத்
துயர்மலை பிளந்திவுளி முகிதுளைத் தெவருமுய
வோதிபணி பவர் கவலைதீர்
சுற்றுமயின் மிசையுபய வனமாதர் பயின்முருக
தூயவருள் செல்வி புரம்வாழ்
சுரவாறு மகநாம மறையாறு சுகசேம
துரையாறு முக சுவாமியே. (8)

வம்புதன வரசவசு ரேந்திரன் மகள்கூடி
வாழ்ந்துகா சிப முனிவனுன்

மந்த்ரி யருடவத்தாயு ளண்டவர சாதிதர
வான்றெழும யேந்தி ரத்திற்
றெம்புமனே மக்கடுணே யவர்தங்கை யுடனரசி
செயத்தருதுன் மாயை புத்ரன் [பல
செருமலேதம் பியர்தனேயர் தனியாண்மை கொடுமை
சேனேபடை யாவு முற்றி
வெம்புகொடு வாள்வீர சூரபத்மன் னெதிர
விமலமெய்க் காட்ட வேத்தி
வெகுண்டடர வலேயின்மா வாகவீட் டிருகூறு
வெண்கோழித் துவச மாவிண்
தும்புகெட மயிலேறி வெற்றிவேல் கைக்கொண்ட
சோதியருள் சந்தன வனம்வாழ்
சுரவாறு மகநாம மறையாறு சுகசேம
துரையாறு முக சுவாமியே. (9)

கந்தமலி தருநிழற் றேனுவெண் களிறுபரி
கமலம்வளே மணிசுரர் நிரை
கற்பரம் பயர்சூழ சிவிகையெழு முனிவர்பொற
கதலியுரு மெதிர் வச்சிர
விந்தைமலி படையேந்தி மூவுலகுங் குடைகவிய
விட்சு தர்மையின் மாலேதாழ்
வீரபுய நிறைசசி சுகத்தவரி யணேவீற்ற
மேகமூர் தேவ ராயன்

சந்தமலி யெழுநிறப் பொன்பூத்த மின்கொடிச்
சர்வபூ டண கனதனத்
தனதேவ குஞ்சரியைத் தாரைநீ ராற்றரத்
தணல்வேள்வி முன் மணந்துச்
சொந்தமலி வெள்ளானை மேற்றிரு மணக்கோலந்
தொழவருள் செல்விபுரம் வாழ்
சுரவாறு மகநாம மறையாறு சுகசேம
துரையாறு முக சுவாமியே. (10)

மன்னுமலை வாரமேற் பாடிவன வேடர்பதி
வல்லாண்மை வேனம்பி செய்
மாதவச் சிவமுனிவ னருளின்பிணை யீன்றுசெல
மகண்மனை களிப்ப வளர்நாள்
பொன்னுமோ வெழிலெனப் பைந்தினையி தண்வைகிப்
புட்கடிபூம் பாவை யென்றே
போந்துதேன் பிண்டியுண் டெந்தைமுன் வேங்கையாய்ப்
போனந தாகந் தீர்த்தா
யென்னுண்மோ கமுந்தீர்ப்பை யென்னலேன் மூத்தகிழ
மெனவேக வரு மைங்கர
னெதிர்க்கமா தங்கமே யென்றேடி வந்தணைய
வினமகிழ வனவ்முன் வேட்டுத்
துன்னுகுற வள்ளியம் மையுடன் வருவையருள்
தொல்திருவேட் டீச்சுரம் வாழ்

சுரவாறு மகநாம மறையாறு சுகசேம
துரையாறு முக சுவாமியே. (11)

சென்மநிலை தளராதெந் நாளுநின திருவடியுந்
தேவிமா ரிருவர் பதமுஞ்
சேவித்துத் துதிதிருப் புகழ்வண்ண சந்தமுறத்
திரமாய்ப் படிக்கக் கேட்க
மின்மைகேட வொளிருசெவ் வான்மேனி யிளவுரு
விளங்கெழிற் பசுங் கலபமேல்
வீற்றதிரு வருட்கோலங் காணத்திரு நாமங்கள்
மெய்ப்புளக மெழ வழுத்த
வன்மைகெட் டுள்ளுருகி நெக்கவா நந்தமது
வழியுபா மாலை பாட
வானுளோர் பணியா லயத்துப் புரண்டுடல்
வலம்வரத் தொன்று தொட்டுத்
தொன்மைவிட வரியமா பதகற்கு மிதுவருமோ
தூய்சண்ப காடவியின் வாழ்
சுரவாறு மகநாம மறையாறு சுகசேம
துரையாறு முக சுவாமியே. (12)

வானவர்க டனவமுதுங் கானவர்கள் மனமதுவும்
மாமவல மாக வெற்றி
வடிவேல் சுரப்படைகள் சேவலங் கொடியேந்தி
மயிலேறி நவ வீரர்கண்

மானலக்கங் குமரர் சூழவிந் திரன்மனைவி
வரவரம் பையர் பணிந்து
வாழ்த்துமுரு காசரணங் கார்த்திகே யாசரண
மலைமாது மைந்த சரணந்
தானவர்கள் காலசர ணம்விசா காசரணந்
தந்திமுகற் கிளைய சரணஞ்
சரவணோற் பவசரணங் குமரகுரு பரசரணந்
தாசரதி மருக சரணம்
ஆனவர முதவுசிவ சுப்பிரமண் ணியசரண
மன்பறிவி லென் றுதிக்கு
மருடிருவேட் டசுரத் தாறுமுக சுவாமிநின
தணியதிரு வடிகள் சரணமே. (13)

ஆறுமணி முடிவாழி யாறிரருள் விழிவாழி
யாறிரணி செவிகள் வாழி
யாறிரு கடம்பணிதோள் பன்னிரைத் திரகைக
ளணிமுந்நூன் மார்பம் வாழி
வீறுமுடை யிடைவாழி மென்றிருவ டிகள்வாழி
மேவுமிரு மாதர் வாழி
வெற்றிவேன் மயில்வாழி வெண்சேவற் கொடிவாழி
விசயநவ வீரர் வாழி
கூறிலக்கங் குமரர் வாழிபூ தர்கள்வாழி
கொள்தகர் மனத்தேர் வாழி

குலவுமா றக்கரமோ டாறுகுன் றுகள்வாழி
கூட்டன்பர் வாழி யணியு
நீறுமணி வாழிதிரு வேட்டீச நாதனிட
நிறைசண்ப கக்கொ டியரு
ணோரைங் கரற்கிளைய வாறுமுக சுவாமியே
நீடூழி வாழி வாழி. (14)

வேலுமயிலுந்துணை.

---

## அருள் பெறும் வழி

வந்த வினையும் வருகின்ற வல்வினையும்
கந்தனென்று சொல்லக் கலங்குமே ; செந்திநகர்ச்
சேவகா ! என்று திருநீ(று) அணிவார்க்கு
மேவவா ராதே வினை. —பழைய பாடல்

## வாழ்த்து

ஆறிரு தடந்தோள் வாழ்க ;
அறுமுகம் வாழ்க ; வெற்பைக்
கூறுசெய் தனிவேல் வாழ்க ;
குக்குடம் வாழ்க ; செவ்வேள்
ஏறிய மஞ்ஞை வாழ்க ;
யானைதன் அணங்கு வாழ்க ;
மாறிலா வள்ளி வாழ்க ;
வாழ்கசீர் அடியார் எல்லாம்.

—கந்தபுராணம்

---

### வேண்டுகோள்

விரோதிகிருது ஆண்டு சித்திரைத் திருவிழாவைத் தொடர்ந்து திருவேட்டீசுவரர் ஆலயத்தில் திருப்பணி வேலைகள் தொடங்கவுள்ளன.

அன்பர்கள் தம் காணிக்கைகளை விரைவில் தேவஸ்தானத்திற் சேர்ப்பிக்கவும்.

